அமரர் முருகு சுப்பிரமணியன் குடும்பத்தினரும்
மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் இணைந்து நடத்தும்

# முருகு
# 100 Years CELEBRATION
# நூற்றாண்டு விழா



# முருகு சுப்பிரமணியன்
## தமிழ் ஏடுகளுக்கு ஒரு வரலாற்றுப் பெட்டகம்

20 அக்டோபர் 2024
செட்டியார்கள் மண்டபம், செந்தூல், கோலாலம்பூர்





**அமரர் முருகு சுப்பிரமணியன் குடும்பத்தினரும்**
**மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் இணைந்து நடத்தும்**

# அமரர் முருகு சுப்பிரமணியன் நூற்றாண்டு விழா

20 அக்டோபர் 2024
மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 மணிவரை
செட்டியார்கள் மண்டபம், செந்தூல், கோலாலம்பூர்

| | |
|---|---|
| மாலை 4.30 மணி | தேநீர் விருந்துபசரிப்பு |
| நிகழ்ச்சி நெறியாளர்கள் | **லக்ஷ்மி பழனியப்பன் & மஞ்சுளா முத்துராமன்** |
| மாலை 5.00 மணி | இறைவணக்கம் - **அக்ஷதா அலமேலு** |
| | தமிழ் வாழ்த்து |
| | வரவேற்புரை : **திரு. மோகனன் பெருமாள்** இணை ஏற்பாட்டாளர் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவர் |
| | வீணை வாசித்தல் **அலமேலு முத்தையா** |
| மாலை 5.40 மணி | சிறப்புரைகள்: |
| | **முனைவர் ஸ்ரீ லக்ஷ்மி** - “முருகு என்னும் ஆளுமை” |
| | **கவிஞர் பாதாசன்** - ‘முருகுவுடன் தமிழ்நேசன் அனுபவங்கள்’ |
| | **கவிதை** - படைப்பவர் கவிஞர் சீராகி |
| | **இராமதாஸ் மனோகரன்** - ‘முருகுவுடனான புதிய சமுதாயம் பணி அனுபவங்கள்’ |
| | **இரா.முத்தரசன்** - ‘முருகுவுடன் புதிய சமுதாயம்’ அனுபவங்கள் |
| | பெ.இராஜேந்திரன் - “மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் வளர்ச்சிக்கு முருகுவின் பங்களிப்பு” |
| முருகு இணையத்தள தொடக்கம் | **பேராசிரியர் டாக்டர் சுப.திண்ணப்பன்** |
| விளக்கம் | **திரு. சுபாஷ் பழனியப்பன்** |
| ஏற்புரை | **டாக்டர் கலைமணி சுப்பிரமணியன்** |
| தலைமையுரை: | **சொல்வேந்தர் ‘மாண்புமிகு டத்தோஸ்ரீ எம்.சரவணன்** மஇகா தேசியத் துணைத் தலைவர், தாப்பா நாடாளுமன்ற உறுப்பினர் |

இரவு விருந்து





# என் தந்தையாரின் அடிச்சுவடுகள்

- செல்வம்



பிறப்பு: 1924ம் ஆண்டு அக்டோபர் மாதம் 5ம் தேதி. பெற்றோர்: முருகப்பன் சிவகாமி ஆச்சி. சிறு வயதில் தந்தையை இழந்ததால் தாயாரின் அரவணைப்பில் வளர்ந்தார்.

கல்வி: தமிழ் நாட்டில் கோனாபட்டு சரஸ்வதி தொடக்க உயர்நிலைப் பள்ளிகள். திருச்சி அர்ச் சூசையப்பர் கல்லூரியில் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பு

1942ல் 18வது வயதில் இளந்தமிழன் என்னும் கையெழுத்து இதழை கோனாபட்டிலிருந்து வெளியிட்டார். பதினைந்து பிரதிகள் வரை எழுதப்பட்டு விநியோகம் செய்யப்பட்டது. அதில் கதைகள், கட்டுரைகள் இடம் பெற்றன. தூய தமிழ்ச் சொற்கள் பயன்படுத்தப்பட்டன. அதில் திராவிட இயக்க சிந்தனைகள் மிகுந்திருந்தன. 1943ம் ஆண்டு கோனாபட்டில் இளங்கோவடிகள் வண்ணப்படம் இளந்தமிழன் சார்பில் வெளியிடப்பட்டது.

1944 தொடக்கம் 1946 வரை காரைக்குடியிலிருந்து வெளியான குமரன் இதழில் பணியாற்றினார். பத்திரிக்கை தொழிநுட்பங்களை அங்கு முருகு கற்றறிந்தார்.

1945ல் தமிழகம் ஒ சிறுவயலைச் சேர்ந்த அழகப்ப செட்டியார் சீதை ஆச்சி தம்பதியினரின் மகள் வள்ளியம்மையை திருமணம் செய்தார்.

அவர்களுடைய திருமணத்தில் கவிஞர் பாரதிதாசன் கலந்து கொண்டு சிறப்பித்தார். முரு. சுப்பிரமணியன் என்பதை முருகு சுப்பிரமணியன் எனப் பெயர் சூட்டியவரும் பாரதிதாசன் தான். அவரது வாழ்த்துப்பாடல்:

திருவளர் செல்வன் முருகென அழைக்கும்
மருவுசீர்ச் சுப்பிர மணியன், "குமரனாம்'
கவின் தாள் உதவிக் கணக்காயன் பேர்
நவிலினும் உள்ளம் நனிஉவப் புறுமோர்
புகழும் நல் ஒழுக்கமும் புதியன போற்றும்
தகைமையும் எழுத்திலோர் தனித்த வன்மையும்
அமைந்தோன் தன் பேரன்பினை இந்நாள்
அமிழ்துமொழி வள்ளிக் களிக்க லுற்றான்!
புள்ளிமான் நிகர்த்த வள்ளிதானும்
கொள்ளும் உள்ளன்பை அள்ளி முருகினில்
சேர்க்க லானாள் இத் திருமணச் செய்தியைக்
கேட்கலானோம் கிளர்ந்தது மகிழ்ச்சி !
தெள்ளிய தமிழ் ஓசை சேர்ந்தென மணங்கொள்
வள்ளியும் முருகும் பிள்ளைகள் பெற்றும்
பெருவாழ்வுற்றுப் பேரின் பெய்துக!
திருவோங்கு தமிழர் வாழிய
உருவோங்கு செந்தமிழ் உயர்ந்து வாழியே !

1947ல் புதுக்கோட்டையில் பொன்னி மாத இதழை தாய் மாமன் அரு. பெரியண்ணன் அவர்களுடன் இணைந்து என் தந்தையார்





தொடங்கினார்கள். பெரியார் என்று அழைக்கப்பட்ட ஈ.வெ.ரா.வின் சுயமரியாதை இயக்க சிந்தனைகள் அந்த இதழில். இடம் பெற்றன. தமிழில் மறுமலர்ச்சி இயக்கத்திற்கு அடித்தளமிட்டது பொன்னி என துணிந்து கூறலாம். தமிழக இதழ்கள் தீபாவளி மலர்களை மட்டுமே வெளியிட்ட காலத்தில் பொங்கல் மலரை வெளியிட்டு பொன்னி சாதனை படைத்தது. பொன்னியில் தங்களது எழுத்துக்களைப் படைக்காத அந்தக் காலத்திய திராவிட இயக்க திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்கள் இல்லை. கண்ணதாசன் தமது வனவாசம் புத்தகத்தில் முருகுவையும் அரு பெரியண்ணன் அவர்களையும் சந்தித்ததை இவ்வாறு குறிப்பிடுகிறார்; "பெரியாரை அவர்கள் கடவுளாகக் கொண்டாடியவர்கள் அண்ணாதுரையை உயிருக்கு உயிராக நேசித்தவர்கள் "பொன்னி" இதழ் வண்ண முகப்பு அட்டை போட்டு அழகாக வெளி வந்தது. பத்திரிக்கைத் துறையில் மற்றவர்கள் செய்து காட்டாத புதுமை எல்லாம் அவர்கள் செய்து காட்டினார்கள்".

தமிழர் நல்வாழ்வுடன் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் பொன்னி உறுதுணையாக இருந்தது. பாரதிதாசன் பரம்பரை என்னும் கவிஞர் அணியை அது தோற்றுவித்தது. அதில் அறிமுகமான பலர் பின்னாளில் புகழ் பெற்றனர். சுரதா, நாரா நாச்சியப்பன், நாஞ்சில் மனோகரன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

புதுக்கோட்டையில் சிறிய அச்சகத்தை வைத்துக் கொண்டு சாதனை புரிந்த பொன்னி 1950களின் தொடக்கத்தில் சென்னைக்கு இடம் பெயர்ந்தது. நிதிப் பற்றாக்குறையாலும் கூட்டுச் சேர்ந்தவர்கள் பின் வாங்கியதாலும் 1953ல் பொன்னி நிறுத்தப்பட்டது

1953ல் அன்றைய மலாயாவுக்கு ரஜுலா கப்பலில் எங்கள் தந்தையார் புறப்பட்டு சென்றார்.

1953ல் தமிழ் நேசனில் துணை ஆசிரியராக பணி ஏற்றார். 1954ல் சிங்கப்பூர் தமிழ் முரசு நாளிதழில் துணை ஆசிரியராக வேலை செய்யத் தொடங்கினார்.

சிங்கப்பூரில் இருந்த காலத்தில் தமிழர் சீர்திருத்த சங்கத்தின் செயலாளராக பொறுப்பேற்ற பின்னர் பல்வேறு தமிழ் சமூக இலக்கிய மேம்பாட்டுக்கு உறுதுணையாக இருந்தார். அந்த அமைப்பின் இலக்கியப் பகுதிக்கு ஆசிரியராக இருந்து பலருக்கு பாடம் சொல்லிக் கொடுத்தார். தமிழ் முரசில் வெண்பாப் போட்டியை தொடக்கி வைத்து கவிஞர்களிடையேபுத்துணர்வைஏற்படுத்தினார். அந்த நாளிதழில் கவிதைப் பக்கம், எழுத்தாளர் அறிமுகம், போன்ற அங்கங்களும் இடம் பெற்றன.

தமிழரின் அடிப்படைக் குறைகள் என்ற முருகுவின் கட்டுரைத் தொடர் தமிழர்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தியது. சிங்கப்பூர் வானொலி பள்ளிக்கூட ஒலிபரப்பில் மூதுரை, நல்வழி, நீதி வெண்பா, நீதி நெறி விளக்கம், நாலடியார் போன்ற நீதி நூல்களை அடிப்படை-யாகக்கொண்டு கட்டுரைகளை அவர்கள் படைத்துள்ளார்கள்

1962ம் ஆண்டு பிப்ரவரியில் தமிழ் நேசனுக்குத் தலைமை ஆசிரியர் பொறுப்பேற்று மீண்டும் கோலாலம்பூருக்கு வந்தார்கள்.

பத்திரிக்கை என்பது செய்திகளை வெளியிடுவதோடு நின்று விடக் கூடாது சமூக வளர்ச்சியிலும் பங்கு கொள்ள வேண்டும் என்பது என் தந்தையின் ஆணித்தரமான எண்ணமாகும்.

தமிழ் நேசன் சமூக இயக்கங்கள் சம்பந்தப்பட்ட நிகழ்வுகளை தொகுத்து வெளியிட்டதுடன் அவற்றின் நிகழ்வுகளை சங்கச் செய்திகள் என்ற பகுதியில் பிரசுரிக்கவும் தொடங்கியது.

தமிழ் இளைஞர் மணி மன்றம், முத்தமிழ் படிப்பகம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கும் அவர்கள் உறுதுணையாக இருந்தார்கள். ஞாயிற்றுக் கிழமை வெளிவந்த கேள்வி பதில் அங்கம் பிரபலமானது. ஆசிரியரின் பதிலை படிப்பதற்கே ஒரு வாசகர் கூட்டம் இருந்தது.

தமிழ் நேசன் அவரது கால கட்டத்தில் பல நிதிகளை திரட்டிக் கொடுத்துள்ளது. அவற்றுள் ஜெகதாம்பாள் நிதி, செல்வி கிருஷ்ணவேணி நிதி, பிரதமர் துங்கு அறிவித்த ஜனநாயகக் காப்பு நிதி, தேசிய வீரர் நிதி, தமிழ்ப் பள்ளி மாணவர் உதவி நிதி ஆகியவை அவற்றுள் குறிப்பிடத்தக்கவை. தமிழ்ப் பள்ளி புனரமைப்பு திட்டத்திற்கு எதிராக தமிழ் நேசன் பெரிய போராட்டமே நடத்தியது. அந்தப் போராட்டம் தமிழ்ப் பள்ளிகள் நிலைத்திருக்க உதவியது.



1963ம் ஆண்டு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்துக்கு புத்துயிரூட்டி அதற்கு பல ஆண்டுகள் தலைவராகவும் இருந்துள்ளார்.

தமிழ் நேசன் அறிமுகம் செய்த எழுத்தாளர்களுக்கு சன்மானம், பவுன் பரிசுத் திட்டம் ஆகியவை எழுத்தாளர்களுக்கு உற்சாகத்தை அளித்தன.

1966ம் ஆண்டு கோலாலம்பூரில் நடத்தப்பட்ட முதலாவது தமிழாராய்ச்சி மாநாட்டில் அமைப்புக் குழுவில் உறுப்பினராக செயல்பட்டு அந்த மாநாட்டின் வெற்றிக்கு என் தந்தையார் பேருதவி செய்துள்ளார்கள். இவை அனைத்தும் தமிழ்நேசனை சமூகத்திற்கு அணுக்கமாக கொண்டு சென்றது என்றால் மிகை இல்லை.

அவர்கள் எழுதிய தலையங்கங்கள் அழுத்தமானவை. ஆழமானவை. சமூக சிந்தனைகளை கொண்டவை. தெளிவான நடையில் இருக்கும். அவர் எழுதிய தலையங்கங்கள் மலேசிய பொதுத் தேர்வு தமிழ் வினாத் தாட்களில் இடம்பெற்றுள்ளன.

பல நாடுகளுக்கு சென்று வந்துள்ள அவர்கள் எழுதிய பயணக் கட்டுரைகள் பலரால் விரும்பிப் படிக்கப்பட்டன. சீனா, ரஷ்யா, பிரிட்டன், எகிப்து, அல்ஜீரியா, கம்போடியா, வியட்னாம், ஐக்கிய அரபுக் குடியரசு இந்தோனிசியா ஆகிய நாடுகளுக்கு சென்று வந்துள்ளார்கள்.

தமிழ் நேசனிலிருந்து விலகிக் கொண்ட பின்னர் 1977ம் ஆண்டு புதிய சமுதாயம் என்னும் இதழைத் தொடங்கினார்கள். அதில் மதுபான விளம்பரத்தை ஏற்கக் கூடாது என்ற கொள்கையை இறுதி வரை அவர்கள் கடைப்பிடித்தார்கள்.

எங்கள் தந்தையார் பல சீர்திருத்த திருமணங்களையும் நடத்தி வைத்துள்ளார்கள். இளமைப் பருவத்தில் பெரியாருடைய எண்ணங்களில் கொண்டிருந்த ஈடுபாட்டின் தாக்கமே அதுவாகும்.

## பெற்ற விருதுகள்:

- 1968ம் ஆண்டு மாமன்னரிடமிருந்து ஏ எம் என் விருது
- 1974ம் ஆண்டு சிலாங்கூர் சுல்தானிடமிருந்து எஸ் எம் எஸ் விருது.
- என் தந்தையார் பதவிகளை தேடிச் சென்றதில்லை. நாடுவதும் இல்லை. என்றாலும் சில பொறுப்புக்களை வகித்து வந்தார்.
- பெர்னாமா செய்தி நிறுவனத்தின் ஆட்சிக் குழு உறுப்பினர்,
- மலேசிய பத்திரிக்கைக் கழக ஆட்சிக் குழு உறுப்பினர்,
- ஆசியான் தகவல் சாதன மலேசியக் குழு உறுப்பினர்
- தேசிய வீரர் நல்வாழ்வு நிதி உறுப்பினர்
- திரைப்பட மேல் முறையீட்டுக் குழு உறுப்பினர்,
- தமிழ் இளைஞர் மணி மன்ற தேசியப் பேரவையின் காப்பாளர்

## வெளி வந்த நூல்கள்:

- தமிழ் கூறு நல்லுலகம்
- நீதி வெண்பாவின் நெறிமுறைகள்
- நன்னெறி நூல் நயம்
- நல்வழி விருந்து
- பாரதியும் பாரதிதாசனும்

1982ம் ஆண்டு ஏப்ரல் 9ம் தேதி தேர்தல் வாக்களிப்புப் பற்றிய கருத்தரங்கு மலேசிய வானொலியில். ஒலிப்பதிவு செய்யப்பட்டது. அதில் கலந்து கொண்டு பேசிய என் தந்தையார் வாக்களிக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தியிருந்தார். ஒலிப்பதிவுக்குப் பின்னர் அவர்களை வீட்டில் கொண்டு போய் விட்டு விட்டு என் வீட்டுக்குத் திரும்பினேன். அடுத்த நாள் அந்த நிகழ்வு ஒலிபரப்பான நேரத்தில் அவரது ஆன்மா உடலை விட்டுப் பிரிந்திருந்தது.

அவர்கள் மொத்தம் பூமியில் வாழ்ந்த ஆண்டு 58. அதில் 29 ஆண்டுகள் தமிழ் நாட்டில். 29 ஆண்டுகள் மலேசியாவில். தமிழ் வளர்ச்சியிலும் தமிழ் சமூக வளர்ச்சியிலும் மிகுந்த ஈடுபாடு காட்டிய ஓர் ஆன்மா மறைந்தது.

எங்கள் பெற்றோருக்கு நாங்கள் பிள்ளைகள் ஐவர். பேரப் பிள்ளைகள் 12. கொள்ளுப் பேரப் பிள்ளைகள் 19.





# Murugu 100

## Biodata of Murugu Subramanian

**- Selvam**

Date of Birth : 5th October 1924

Place: Konapattu, A village in Puthukkottai District, Tamil Nadu

Parents: Murugappan - Sivagami Achi

Education: secondary school level and Pre university course in St Joseph's college Tiruchirapalli Tamil Nadu

In the year 1942, at the age of 18, Murugu published hand written magazine 'Ilan Tamizhan' ( Tamil youth ). Copies were distributed to the youths in Konapattu. Its contents were short stories, poems and articles on Dravidian movement.

Later in 1944 he joined 'Kumaran' a weekly magazine published by So. Murugappa of Karaikudi. He learned the art of publications there.

In 1947 'Ponni' a bimonthly magazine was launched from Puthukkottai. His partner was his maternal uncle AR. Periyannan. The magazine was a mouthpiece of Dravidian movement propagated by Periyar. Reforms in the Tamil community were the core subjects of the magazine. Its contents were short stories and poems. The writers to the magazine were the Dravidian movement leaders and DMK leaders.

He introduced Barathithasan Paramparai ( Generation of Barathithasan ) in Ponni. The poems written by aspiring poets were published. The magazine was a launch pad for many well-known poets in Tamil Nadu. They fared well in poetry including the









Cinema field. Suratha, Nara Nachiappan, Nanjil Manokaran to name a few.

1950s Murugu and Periyannan shifted 'Ponni' to Madras ( Chennai) with a great vision to take the magazine to greater heights.

1953 'Ponni' ceased publication due to economic disadvantage and lack of advertisement revenue.

1953 He left for then Malaya in ' Rajula' ship.

1953 he joined Tamil Nesan in Kuala Lumpur as Sub editor.

1954 He joined Tamil Murasu published from Singapore as a sub editor.

In Singapore he was the secretary of the Tamils reform Association. The objective of the association was to uplift the community.

He gave talks in Tamil School Broadcast, Radio Singapore on Moothurai, Nalvazhi, and Naladiyar.

1962 he rejoined Tamil Nesan in Kuala Lumpur as its chief editor.

He had a strong belief that Newspapers must reach the community in addition to publishing news.

He introduced several columns to bring the community closer.

Payments to the writers were introduced. 'A sovereign' gift for the best writer was launched. It has produced a pool of well-known writers.

He reinstated the deregistered Malaysian Tamil writers Association and was its president for many years.

During his time, Tamil Nesan collected many funds. National Hero's Fund, Save Democracy Fund, Tamil Schools Students Aid Fund were among them

He was a member of the Bernama Governing Board, Film Censor Board Appeal Committee, ASEAN Media Council Malaysia Chapter.

## AWARDS

AMN from Yang di pertuan Agong

SMS from Sultan Selangor

On 10th April 1982 he passed away in his sleep at the age of 58 leaving his family and fellow writers in sorrow. Today, 42 years after his demise, on his 100th year birthday the Indian community is remembering him and celebrating his contributions to the Tamil Community.





# முருகு சுப்பிரமணியன்
# பொன்னி ஆசிரியவுரைகள்

பொன்னி - 1947, பிப்ரவரி

## எங்கள் எண்ணம்

தமிழ்ப் பெருமக்களுக்கு வணக்கம்.

'பொன்னி' தமிழ் நிலத்தை வளமாக்கி வருகிறாள். தமிழர் உண்ணும் சோற்றுக்கு ஊற்றாகி நிற்பவள் அவளே. தமிழகத்தைத் தொழில் வட்டமாக்கும் திட்டமும் அவள் கையில்தான். அவளைக் கட்டுப்படுத்திக் கரையமைத்துத் தனக்கு வழிவழியாகப் பயன்படும்படி செய்துகொண்டான் தமிழ் மகன். இவை பொன்னியாற்றைப்பற்றி நாம் குறிப்பவை.

இன்று முதல் 'பொன்னி' பத்திரிகை தமிழ்மக்களுக்குப் பயன்தரப் போகிறாள். எங்கெங்கோ ஊறிச் செழிக்கும் கருத்துக்களை அவை தமிழர்க்கு ஆக்கம் தருபவையானால் - தேடிக்கொணர்ந்து தமிழர்க்குப் படைப்பாள். தமிழர் நெஞ்சம் வளமாகும் வகையில் அவள் எண்ண ஓடை பாயும்.

தூயவை அல்லாது தீயவை காணில் அவள் நெஞ்சம் குமுறும்; பெருக்கெடுத்தோடு வெள்ளத்தில் தீயவை மாய்ந்து மறையும். புதிய தீங்கவிதைகள், சிந்தனையாற்றலை வளர்க்க வரும் கட்டுரைகள், எண்ணி உயர உதவும் கதைகள், இவற்றைச் சிந்தனைச் சிற்பிகளின் துணையால் 'பொன்னி' வழங்கி வருவாள்.

தமிழில் நனைந்த தமிழ் நாட்டைக் காணும் கருத்திலே 'பொன்னி' புறப்பட்டுவிட்டாள். தமிழர் பெரும்படையும் அத்திசையில் தானே சென்று கொண்டிருக்கிறது

---

## தமிழ்ப் புலமைக்குப் பரிசு

தமிழ் கற்றுத் தரும் நல்லாசிரியர்களின் குரலை அண்மையில் சென்னையில் கூடிய மாகாணத் தமிழாசிரியர் மாநாட்டில் நாம் ஒருவாறு கேட்க முடிந்தது. மொழியாக்கம் ஒன்றே குறிக்கோளெனக் கொண்டு வாழ்ந்த அவர்கள் தம் நிலையாக்கம் வேண்டித் துடிப்பதை மாநாட்டு நிகழ்ச்சிகள் காட்டிநின்றன. நிலைதாழ்ந்தவர்களான, தீண்டப்படாத ஆசிரியர்களாக, அடிமை மொழியைக் கற்பிக்கிறவர்களாக, மாணவர்களின் - ஏன் பெரும்பான்மை மக்களின் கேலிக்குரிய 'தமிழ் ஐயா'க்களாக நிலவி வந்தவர்கள், 'உலவும் நடைப்பிணமாக இருக்க இனியும் ஒப்போம், உயர்வு தராவிடில் இனிப் போர் தொடுப்போம்" என்று போர் முரசு கொட்டுகிறார்கள்.

முன்னாளில் நாடும் கழனியும் நன்முத்துக் குவியலும் தம் தமிழ்ப் புலமைக்குப் பரிசாகப் பெற்ற இவர்கள் இன்று கேட்பதெல்லாம் வேலைக்கேற்ற சம்பளம்தான்; உடன் வேலை செய்யும் பிற ஆசிரியர்கள் பெறுமளவு சம்பளமே அவர்களின் கோரிக்கை! இக் கோரிக்கையை மறுப்பாரோ சம்பள உயர்வு கூடாதெனத் தடுப்பாரோ யாரும் இல்லை. அப்படி இருந்தும் தமிழாசிரியர்களின் குறை இன்னும் தீர்க்கப்படவில்லையே!

குறைந்த சம்பளம் பெறுகின்ற தமிழாசிரியர்கள் ஆங்கிலம், கணக்கு முதலிய பிறபாடங்கள் கற்பிக்கும் ஆசிரியர்கள் தம்மைவிட அதிக ஊதியம் பெறுவதைக் காணுந்தோறும் அவர்கள் உள்ளம் என்ன எண்ணும்? "ஏன் தமிழ் கற்றோம்? தமிழ் கற்ற நாட்களில் பிறமொழிப் பயிற்சியோ, பிறபாடப் பயிற்சியோ அடைந்திருந்தால் நாமும் நிறைந்த வருவாய் பெறலாமே" என்றுதானே அவர்கள் எண்ணுவர்.



தமிழ்ப் புலமைக்கு நாட்டில் மதிப்பில்லை; காரணம் தமிழ்ப் புலவர்கட்குத் தக்க வருவாய் இல்லை; தமிழ்ப்பயிற்சியின் இன்றியமையாமையை மறக்கும் அளவிற்குத் தமிழ்மொழியைத் - தமிழாசிரியர்களைப் புறக்கணிக்கும் நிலைக்கு இக்குறைந்த சம்பளம் நம்மைக் கொண்டு சேர்த்து விட்டது.

இனியும் 'குறைந்த சம்பளமே தருவோம்; உம் குறைதீர்க்க அறியோம்' என்பது அரசினர் கருத்தானால் தமிழ்ப் புலமை பெறவிரும்புவோர் தொகை நாளுக்கு நாள் தேய்ந்து, இருக்கும் தமிழ்க் கல்லூரி சிலவற்றையும் இல்லாமற் செய்ய நேருமென்பதை நினைவூட்ட விரும்புகிறோம்.

தமிழகம் உரிமை பெறப் போகின்ற இந்நாளில், மனமுவந்து அரசினர் தமிழுக்கு முதன்மை நல்கிய பின்னும், தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கின்ற இவ்வேளையிலும், தமிழாசிரியர் நிலை தாழ்ந்தே இருக்க வேண்டுமென்பது ஆள்வோர் நியதியானால், அஃதினை மாற்றியமைக்க வரும் போராட்டத்தை மகிழ்ச்சியுடன் வரவேற்போம்; கடலும். கறையானும், மாற்றலரும் மறைத்த தமிழ் போக இருந்த தமிழைப் பேணி நமக்களித்த தமிழ்ச் செல்வர்கட்கு உயர்வு தருவதை இனியும் தள்ளிப் போடலாகாது என்று எச்சரிப்போம்; இவ்வேண்டுகோளைக் கேளாக்காதினர் ஆளவந்தாராக என்றும் இருத்தல் இயலாது என்பதையும் கூறி விடுவோம்; 'தமிழ் நாட்டில் தமிழை மதியாத அரசு' இல்பொருள் உவமை தானே!




## புரட்சிக் கவிஞர்

தமிழகம் சாதி சமயங்கட்கு ஆட்பட்டிருந்தது. ஆள்வோர் வியக்க அடிமை நயந்தது. அத்தனைத் துறைகளையும் அயல் மொழிகட்கு விடுத்துத் தாய்மொழியைப் பேணாதொழிந்தது. இந்நிலை மாறுதல் பெற்றுத் தமிழர் சமுதாயம் ஆறுதல் பெற்றுய்ய வேண்டுமெனக் காலங்கருதியது இயற்கையே!

கவிஞர் கனகசுப்புரத்தினம் தம் இளமையிலேயே தம் தாயகத்தின் தேய்ந்த நிலையைக் கண்ணுற்றார். அவர் நெஞ்சம் கொதித்தது. மாற்று மருந்தென அவர்தம் பாடல்கள் எழுந்தன. தமிழகம் பாரதிதாசரின் பாடற்பயன்கொண்டு விழிப்புற்று முன்னேறி வருகிறது.

தமிழுக்குக் கவிஞர் தந்துள்ள இலக்கியம் மக்கள் இலக்கியம். தேவனையும், மன்னனையுமே ஏற்றிப் புகழ் பாடிவந்த தமிழிலக்கியம், பாரதிதாசனார் வாக்கில், வண்டியோட்டும் குப்பனுக்கும், களையெடுக்கும் கன்னியருக்கும் ஏற்றம் பாடுகிறது. சமயநெறியோடு இணைந்து வளர்ந்த தமிழ்மொழி பொதுநெறி புக வழிகாட்டியதும் கவிஞர்தாம்.

இது பாட்டாளியுகம். உழைப்பவர்க்கே உலகு உரியதென்பதை. பாட்டாளியின் எழுச்சியை, ஓடப்பர் உதையப்பராக மாறவேண்டுமெனும் அறிவுரையை, ஆதிக்கவாதிகளின் காலம் அழிந்தது என்ற ஆய்வுரையைக் கவிஞர் அங்கங்கே சுட்டிக் காட்டி உழைப்பவரைத் தட்டி எழுப்புகிறார்.





திருந்தாத சமுதாயம் கண்டு கவிஞர் உள்ளம் வருந்தியது. தம்முள்ளே ஆயிரம் பிரிவுகள், முன்னேற முடியாதபடி தடுக்கச் சமூகக் கட்டுப்பாடுகள், மூடப் பழக்க வழக்கங்கள், பழைமையிலே பிடிப்பு இவை கவிஞரின் சினத்துக்காளாயின. அங்கங்கே இவற்றைச்சாடி புதிய வழியைத் தேடும்படி, பாடி வைத்துள்ளவை கவியரசரின் சீர்திருத்த ஆர்வத்திற்குச் சான்று பகர்கின்றன.

மொழி வளர்ச்சி பெறாத சமுதாயம் விழிபெறாததற்கொப்பாகும் என்று எண்ணிய கவிஞர் தமிழ் வளர்ச்சிக்கு வழிபல காட்டுகின்றார். தமிழ் முன்னேற்றத்திற்குத் தடையாய் நிற்போர் செயல்களை எடுத்துக் காட்டியும், உரைகளை மறுத்துப் பேசியும், இவை போக்க வகை கூறியும் எழுந்த கவிதைகள் தமிழியக்கமாகத் தமிழிளைஞர்களை மொழிப்போர் செய்க'வென அழைக்கின்றன.

தமிழர் உரிமைப் போராட்டம் தரும் பயன் தமிழர்கள் அனுபவிப்பதாக இருக்க-வேண்டுமென்று எண்ணும் கவிஞர், சென்னை மாகாணம் தனியாட்சிபெற வேண்டுமென்ற திட்டத்தை வரவேற்று "வளமார் எமது திராவிட நாடு வாழ்க வாழ்கவே" என்று வாழ்த்தெடுக்கிறார்.

இத்தகைய முற்போக்கு எண்ணங்களைக் கவிதைகளாக வழங்கும் பாரதிதாசனார் இலக்கிய மேம்பாட்டு வகையிலோ தமிழகத்தின், இருபதாம் நூற்றாண்டில் இணையற்ற கவிஞராக விளங்குகிறார். எளிய சொற்களிலே தெளிவும் இனிமையும் பின்னக் கவியாக்கும் அவர்தம் ஆற்றல், எண்ண எண்ண நமக்குக் களிப்பூட்டும். காலத்துக்கேற்ற கற்பனையும், கதைச் சுவையும் கொண்டு கவிஞர் வழங்கியுள்ள காவியங்கள் தமிழிலக்கிய வானில் என்றும் நின்று ஒளி வீசக் கூடிய இயல்பின,

கவிஞருக்கு வருகின்ற ஏப்ரல் இருபத்தொன்பதன்று ஐம்பத் தேழாவது பிறந்த நாள் வருகிறது. தமிழகத்தின் நல்வாழ்வில், தளராத ஆர்வம் காட்டும் கவிஞரின் பிறந்த நாள் விழாவைத் தமிழ் மக்கள் களிப்புடன் கொண்டாடி மகிழ வேண்டுகின்றோம்.





# தமிழ்நேசன்
## - பொன் விழாவை எதிர்நோக்கும் பூரிப்பு

மலேசியத் தமிழ் மக்களின் குரலாக விளங்கிவரும் 'தமிழ் நேசனுக்கு 48 ஆண்டுகள் நிறைவுற்று இன்று 49ஆவது ஆண்டு துவங்குகிறது.

'நேசன்' கடந்துவந்த 48 ஆண்டுகளை மனநிறைவுடன் திரும்பிப் பார்க்க முடிகின்றது. நாட்டிற்கும் மக்களுக்கும் குறிப்பாக தமிழர்களுக்கும் 'நேசன்' அரிய சேவையாற்றி வந்ததால் இன்று அது வலிவுடனும் பொலிவுடனும் விளங்குகின்றது.

மலேசியாவில் இன்று தலையாய, தமிழ் நாளேடாக 'நேசன்' வளர்ந்திருப்பதற்குக் காரணம் தமிழ் மக்கள் வழங்கி வரும் வற்றாத ஆதரவேயாகும். நேசனின் சீரிய பணிகளின் காரணமாக அது இன்று செல்வாக்குமிக்க நாளேடாக விளங்குகிறது.

இந்த அளவுக்கு மாறாத அன்பும் ஆதரவும் காட்டிவரும் வாசகர்களுக்கும் விற்பனையாளர்களுக்கும் விளம்பரதாரர்களுக்கும் நேசன் இன்று பணிவன்புடன் தனது நன்றியைக் காணிக்கையாக்குகின்றது.

செய்திகளைத் திரட்டி வெளியிடுவதுடன் மட்டும் நின்று கொள்ளாது பல்வேறு சமூகப் பிரச்னைகளிலும் நேசன் முனைப்புடன் ஈடுபாடு கொண்டுவருவதை தமிழ்ப் பெருமக்கள் நன்கு அறிவர். எத்தகைய சிக்கலான சர்ச்சையாக இருந்தாலும் அதுபற்றிய தமிழ்ச் சமூகத்தின் குரலை எதிரொலிக்க நேசன் என்றும் பின்வாங்கியதில்லை.

சமூகப் பிரச்சனையாக இருந்தாலும் சரி, தனிப்பட்டவர்கள் எதிர்நோக்கும் ஒரு சங்கடமாயினும் சரி 'தமிழ் நேசனுக்கு எழுதுவோம்: ஒரு தீர்வுக்கு வழி பிறக்கும்' என்று பெரும்பாலோர் எண்ணுவது கண்கூடு.

சமூகத்திற்குத் தொண்டுபுரியும் அதே நேரத்தில் 'நேசன்" ஒரு சிறந்த தேசிய ஏடாகவும் திகழ்கின்றது. நாட்டின் ஜனநாயக, அரசியல், கலாச்சார வளர்ச்சியிலும் 'தேசியமொழி வளர்ச்சியிலும் 'நேசன் அதிகம் பங்கு பற்றி வந்திருக்கிறது. தேசியம் என்பதே நேசனின் பாரம்பரியக் கொள்கையாகும்.

'ருக்குன் நெகாரா' கோட்பாட்டின் வழி நின்று தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்கும் தனது கொள்கையை இனியும் தொடர்ந்து நேசன் கடைப்பிடிக்கும் என்று அது மீண்டும் உறுதி கூறுகின்றது.

இந்நாட்டில் எத்தனையோ தமிழ் ஏடுகள் தோன்றித் தோன்றி மறைந்துவிட்டன. ஆனால் கடந்த அரை நூற்றாண்டுக் காலத்தில் வயதாலும் அனுபவத்தாலும் விற்பனை எண்ணிக்கையாலும் முதலிடம் வகிக்கும் ஏடாகத் திகழ்கின்றது நேசன், இந்நிலை என்றென்றும் நீடிக்கும் என்பதில் எள்ளவும் ஐயமில்லை.

நேசனின் சாதனைகள் முழுவதையும் பட்டியலிடுவது சாத்தியமில்லை என்ற போதிலும், கடந்த ஆண்டில் மேற்கொண்ட இரு முக்கிய பணிகளை இங்கு குறிப்பிடுவது சாலப் பொருத்தமே.

நேசன் துவக்கிய குறுக்கெழுத்துப் போட்டியும் பவுன் பரிசுத் திட்டமுமே அவை. வாரம் நூறு வெள்ளி பரிசைத் தாங்கிவரும் குறுக்கெழுத்துப் போட்டியில் கலந்து கொள்ளும் வாசகர்கள் அகராதிகளைப் புரட்டுகின்ற நேரத்தில் பல பொருள்கொண்ட சொற்களை அறிவதன் மூலம் தங்களின் மொழியறிவை மென் மேலும் வளர்த்துக்கொள்ள முடிகின்றது. நீண்ட காலமாக இலக்கியத்தை வளர்க்கும் நேசனின் மற்றொரு புதிய முயற்சியே புவுன் பரிசுத்திட்டம். இந்தப் பரிசுத் திட்டம் துவக்கப்பட்டதிலிருந்து அனுபவமிக்க பழைய





எழுத்தாளர்களும் எழுத்துத் துறையில் இப்போது தான் காலை வைக்கும் புதிய எழுத்தாளர்களும் ஆர்வமுடன் பல சிறப்பான கதைகளைப் படைத்து வருகின்றனர். எழுத்தாளர்களை ஊக்குவிப்பதே இத்திட்டத்தின் நோக்கமாகும். ஒரு பவுன் தங்கத்தில் நேசனின் சின்னமான தருமச் சக்கரமும் நேசன் சிறுகதைப் போட்டி என்னும் வாசகமும் பரிசு பெறும் எழுத்தாளரின் பெயரும் பொறிக்கப்பட்டு இப்பதக்கம் வழங்கப் பெறுகிறது. பொருள் மதிப்பில் அல்லாமல் புகழ் அடிப்படையில் இதன் மதிப்பு அளவிடற்கரியது என நமது எழுத்தாளர்கள் பாராட்டுகின்றனர் என்பதற்கு அவர்களிடமிருந்து மலைபோல் வந்து குவியும் சிறுகதைகளே சான்று பகர்கின்றன.

வளர்ந்த நிலையில் உள்ள ஒரு பத்திரிகையே இத்தகைய சிறந்த திட்டங்களை மேற்கொண்டு தொடர்ந்து நடத்தி வர இயலும்.

இத்தகைய நற்பணிகளுக்கு வாசகர்கள் என்றும் உறுதுணையாக நிற்பர் என்னும் தளராத நம்பிக்கை நேசனுக்கு உண்டு.

அடுத்த ஆண்டு நேசனுக்குப் பொன்விழா ஐம்பதாவது அகவை பிறக்கும் இந்தப் பொன் விழாவை ஆவலுடன் எதிர்நோக்கும் ஆயிரமாயிரம் நல்ல இதயங்கள் இந்நாட்டில் உண்டு.

அந்த நல்ல நெஞ்சங்களைக் குளிர்விக்கும் முகத்தான் கதை, கவிதை, கட்டுரைப் போட்டிகளுடன் பொன் விழாவைக் கொண்டாடிட ஓர் எடுப்பான பொன்விழா மலரையும் வெளியிட நேசன் திட்டமிடுகிறது.

முன்னணியில் இருந்துவரும் ஏடாக நேசன் திகழ்ந்த போதிலும் அது கடந்து வந்த பாதை முழுவதும் எப்போதும் 'பசுஞ்சோலையாகவே இருந்ததில்லை. நேசன் எத்தனையோ இடர்பாடுகளைத் தாண்டி வந்திருக்கிறது என்பதை வாசகர்கள் அறிவர்.

எனினும் எல்லாக் காலங்களிலும் நிதானம் நேர்மை - துணிவு - நடுநிலைமை என்னும் கோட்பாடுகளையே எற்போதும் பின்பற்றி வருகிறது. செய்திகள் வெளியிடுவதிலும் தலையங்கம் எழுதுவதிலும் மக்கள் கருத்துகளை முன்வைப்பதிலும் நேர்மையையும், நடுநிலையையும் துணிவையும் அது எப்போதும் அனுசரித்து வருகிறது.

சமுதாயத்தின் நலனையே நேசன் பெரிதாக மதிக்கிறது. இதை வாசகர்களும் பொதுமக்களும் நன்கு அறிவர். ஐக்கிய மலேசியாவில் தமிழ்ச் சமுதாயம் தலைநிமிர்ந்து முன்னேற வேண்டும் என்பதே நேசனின் தணியாத அவா.

**எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே**
**அல்லாமல் வேறொன் றறியோம் பராபரமே!**

●





# புதிய சமுதாயம்

**கம்பம் 1　　27-3-1977　　குடும்பம் 1**

'ஒளிபடைத்த கண்ணினாய் வாவாவா
உறுதிகொண்ட நெஞ்சினாய் வாவாவா
களிபடைத்த மொழியினாய் வாவாவா
கடுமைகொண்ட தோளினாய் வாவாவா
தெளிவுபெற்ற மதியினாய் வாவாவா
சிறுமைகண்டு பொங்குவாய் வாவாவா
எளிமைகண்டு இரங்குவாய் வாவாவா
ஏறுபோல் நடையினாய் வாவாவா

பாரதியின் இவ்வரிகளுக்கேற்ப நம் நாட்டில் படிப்படியாகத் தோற்றம் பெற்றுவரும் வீறுகொண்ட புதிய மலேசியச் சமுதாயத்திற்கு நல்வரவு கூறி அதன் வரிவடிவமாக ஓர் இதழினை இன்றுமுதல் படைக்க முற்பட்டுள்ளோம்.

கொள்கை நோக்குள்ள குடும்பப் பத்திரிகையாக நல்ல குடும்பம் பல்கலைக் கழகம் என்னும் மேம்பட்ட நிலையினை நமது குடும்பங்கள் ஒவ்வொன்றும் எய்திட ஆக்ககரமான வழி காட்டும் கையேடாகப் புதிய சமுதாயம்" நாடெங்கும் வீடெங்கும் பவனி வரும்.

மலேசியாவில் உருவாகிவரும் பொருள் பொதிந்த "புதிய சமுதாயத்"தின் மூன்று முக்கிய கூறுகளில் ஒன்றாக நின்றிலங்கும் இந்திய சமுதாயம், எல்லா வகையாலும் பிற சமூகங்களோடு - முன்னேறி வரும் தாய்த்திருநாட்டின் தோளோடு தோள் இணைந்து நேர் நடை வேகத்தோடு - பயிலப் "புதிய சமுதாயம்" இங்குள்ள எழுத்துலகச் சிற்பிகளின் துணைகொண்டு ஒல்லும் வகையெல்லாம் முயலுமென்று உறுதிகூறுகின்றோம்.




இங்கு யாவரும் மதிக்கத்தக்க நல்ல இதழ் இல்லையே என்னும் சமுதாயம்" தனது பவனி மூலம் போக்க குறையைப் புதிய முயலும். முதலில் மாதம் இருமுறையாகவும் ஒருசில மாதம் கழித்து வார இதழாகவும் "புதிய சமுதாயம்" தனது இலட்சியப் பயணத்தை நடாத்தத் திட்டமிட்டிருக்கிறது.

> "நைந்துபோன, பிய்ந்துபோன முடை நாற்றமெடுக்கும் பழைய கந்தல் வாழ்க்கைக்கு விடைகொடுப்போம்! கல்வியிலும் பொருளிலும் ஏற்றம் பெற்ற நறுமண மிக்க புதிய சமுதாயத்திற்கு நல்வரவு கூறுவோம்!"





## எங்கள் குறிக்கோள்

"புதிய சமுதாயம்" தரமான குடும்பப் பத்திரிகையாக - எவரும் படிக்கத்தக்க எளிமை-யோடு- குடும்பத்திலுள்ள சிறுவர், பெண்டிர், பெரியவர் அனைவரும் படித்துக் களிக்கும் பல்சுவைக் களஞ்சியமாகத் திகழு மென்றும் உறுதி கூறுகிறோம். எழுத்தாளர்களையும் அவர்களின் எழுத்துக்களையும் மதிக்கும் சீரிய கொள்கையைக் கடைப் பிடித்து, படைப்பிலக்கியத் துறையின் சீரான வளர்ச்சிக்கும் "புதிய சமுதாயம்" துணை நிற்கும்.

தேசிய ஒருமைப்பாடு, சமூகங்களின் ஒற்றுமை. கல்வி மேம்பாடு, பொருளியல் முன்னேற்றம் முதலிய பல்வேறு துறைகளிலும் அரசாங்கத்தின் பணிகளுக்கும் தேசத் தலைவர்களின் முயற்சிகளுக்கும் குறிப்பாக இந்திய சமூகத் தலைவர்களின் திட்டங்களுக்கும் - "புதிய சமுதாயம்" வலுவான ஆதரவை நல்கி வரும்.

"நேசனை" விட்டு வெளியேறிய வேதனையிலிருந்து எனக்குக் கைகொடுக்கும் நம்பிக்கை ஒளியாகத் "தேவதூதர்கள்" போல அருமை நண்பர்கள் வந்தார்கள். அந்த நல்ல உள்ளங்களின் துணையோடு "புதிய சமுதாயத்தை" இன்று மலேசியத் தமிழ்ப்பெரு மக்களின் திருமுன்னர் சமர்ப்பிக்கிறோம். வரவேற்று, வாழ்வளித்து. வளர்ச்சி காணச் செய்வது வாசகர்களாகிய உங்கள் பொறுப்பாகும்.

என்னைத் தன் சொந்தக் குழந்தை போல எப்பொழுதும் ஏற்றிப் போற்றி அரவணைத்து வந்திருக்கும் சமுதாயத்திற்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். என் நன்றிக் கடனைத் தீர்ப்பதற்கும் சமுதாயத்திற்குத் தொடர்ந்து பணிபுரிவதற்கும் புதிய சமுதாயம்" ஒரு நிலைக்களனாக அமையும் என்று நம்புகிறேன்.

"புதிய சமுதாயம்" உருக்கொள்வதற்கு எல்லா வகையிலும் துணை நிற்கும் எண்ணற்ற நன்னெஞ்சங்களுக்கும் குறிப்பாக பத்திரிகை விற்பனையாளர்களுக்கும் 'விளம்பரம் தருகின்ற வணிக நிறுவனங்களுக்கும் ஏடு பீடுநடை போட வாழ்த்துரை வழங்கியிருக்கும் பெருமக்களுக்கும் எங்கள் நன்றியையும் வணக்கத்தையும் புலப்படுத்திக்கொள்கிறோம்.



நைந்துபோன, பிய்ந்துபோன முடை நாற்றமெடுக்கும் பழைய கந்தல் வாழ்க்கைக்கு விடைகொடுப்போம்! கல்வியிலும் பொருளிலும் ஏற்றம் பெற்ற நறுமண மிக்க புதிய சமுதாயத்திற்கு நல்வரவு கூறுவோம்!

**முருகு சுப்பிரமணியன்**
**ஆசிரியர்**



# முருகு சுப்பிரமணியன் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள்

| | |
|---|---|
| 5 அக்டோபர் 1924 | முருகப்பன்-சிவகாமி ஆச்சி தம்பதியரின் மகனாக தமிழ் நாடு கோனாபட்டு என்ற ஊரில் பிறந்தார். |
| 1942 | 18-வது வயதில் இளந்தமிழன் என்னும் கையெழுத்து இதழை கோனாபட்டிலிருந்து வெளியிட்டார். |
| 1944-1946 | காரைக்குடியிலிருந்து வெளியான குமரன் இதழில் பணியாற்றினார். |
| 1945 | தமிழகம் ஓ சிறுவயலைச் சேர்ந்த அழகப்ப செட்டியார் - சீதை ஆச்சி தம்பதியினரின் மகள் வள்ளியம்மையை திருமணம் செய்தார். |
| 1946 | முருகு தம்பதியருக்கு மூத்த புதல்வர் செல்வம் பிறந்தார். |
| 1947 | புதுக்கோட்டையில் பொன்னி மாத இதழைத் தொடக்கினார். |
| 1948 | முருகுவின் இரண்டாவது புதல்வர் பாண்டியன் பிறந்தார். |
| 1950 | முருகுவின் மூன்றாவது புதல்வர் கலைமணி பிறந்தார். |
| 1950 | பொன்னி இதழ் சென்னைக்கு இடம் பெயர்ந்தது. |
| 1953 | முருகுவின் புதல்வி பொன்னி பிறந்தார். |
| 1953 | நிதிப் பற்றாக்குறையால் பொன்னி இதழ் நிறுத்தப்பட்டது |
| 1953 | ரஜுலா கப்பலில் மலாயாவுக்கு வந்தடைந்தார். |
| 1953 | தமிழ் நேசனில் துணை ஆசிரியராக பணி ஏற்றார். |
| 1954 | சிங்கப்பூர் தமிழ் முரசு நாளிதழில் துணை ஆசிரியராகப் பணி தொடங்கினார். |
| பிப்ரவரி 1962 | தமிழ் நேசனுக்குத் தலைமை ஆசிரியர் பொறுப்பேற்றார். |
| 11.4.1963 | மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் முதல் ஆண்டுக் கூட்டத்தில் அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். |
| 1966 | கோலாலம்பூரில் நடத்தப்பட்ட முதலாவது தமிழாராய்ச்சி மாநாட்டில் அமைப்புக் குழுவில் உறுப்பினராகச் செயல்பட்டார். |
| 1968 | முருகுவின் 5-வது பிள்ளையாக சுப்பையா பிறந்தார். |
| 1977 | தமிழ் நேசனில் இருந்து விலகி புதிய சமுதாயம் என்னும் இதழைத் தொடங்கினார். |
| 1968 | மாமன்னரிடமிருந்து ஏ எம் என் விருது |
| 1974 | சிலாங்கூர் சுல்தானிடமிருந்து எஸ் எம் எஸ் விருது. |
| 10 ஏப்ரல் 1982 | இப்பூவுலகை விட்டு மறைந்தார். |